# கள்வர் கோமான் புல்லியும் களப்பிரரும்

***"வடவேங்கடம் தென்குமரி<br>ஆயிடைத்<br>தமிழ்கூறு நல்லுலகத்து "***

***(தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்:1-3)***

*என்பது பனம்பாரனார் கூற்று. இவ்வடிகளில் பனம்பாரனார் தமிழகத்தின் வடக்கு எல்லையாக வேங்கட மலையையும், தென் எல்லையாகக் குமரிக் கடலையும், கிழக்கே வங்காள விரிகுடாவையும், மேற்கே அரபிக்கடலையும் குறித்துள்ளார். வேங்கடம் முதல் தென்குமரி வரை தமிழ் மொழி பேசப்பட்டது என இப்பாடல் விளக்குகிறது.*

*கிபி 1ஆம் நூற்றாண்டு காலகட்டத்தில் அதாவது இன்றைக்கு 2000 ஆண்டுகளுக்கு முன்பு, வேங்கடமலை முதல் மழநாடு வரை ஆட்சி செய்த கள்வர் கோமான் புல்லி, அகநானூறு,புறநானூறு,நற்றிணை ஆகிய சங்கநூல்களில் ஒன்பது பாடல்களில் போற்றப்படுகிறார். இவரது போர்த்திறன் கொடை, வேங்கடமலையின் சிறப்புகள் ஆகியவற்றை பல புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர். இவரது ஆட்சிப்பகுதி வேங்கடம் முதல் மழவர் நாடான தர்மபுரி , சேலம் ஆகிய பகுதிகள் வரையிலும் இருந்ததை பாடல்கள் உணர்த்துகின்றன.*

# 61. பொதினி அன்ன வனமுலை!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிய, வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 'தன் சாதிக்கு ஏற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினாள்' என்பர். நச்சினார்க் கினியர்.

**சிறப்பு:** வேங்கட மலைக்குத் தலைவனான கள்வர் கோமான் புல்லி; அவன் வணக்கிய மழவர்நாடு; நெடுவேள் ஆவியர் கோமானின் பொதினி மலை.

*(நெஞ்சிலே பொருளார்வம் மிகுதியாகத்தன் காதலியைப் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் சென்றான் தலைவன். குறித்த நாளிலே அவன் வரவில்லையெனத் தலைவி கலங்கினாள். 'அவன் போன இடத்திலேயே தன்னை மறந்து தங்கி விட்டானோ?' எனப் புலம்பினாள். அவளைத் தெளிவிக்கத் தோழி கூறுகின்றாள்.)*

**'நோற்றோர் மன்ற தாமே கூற்றங்**
**கோளுற விளியார், பிறர்கொள விளிந்தோர்'எனத்**
**தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்**
**நாள்இழை நெடுஞ்சுவர் நோக்கி, நோய்உழந்து**
**ஆழல் வாழி, தோழி! - தாழாது,** 5





**உரும்எனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்**
**வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ,**
**அருநிறத்து அழுத்திய அம்பினர் பலருடன்**
**அண்ணல் யானை வெண்கோடு கொண்டு,**
**நறவுநொடை நெல்லின் நாள்மகிழ் அயரும்** 10
**கழல்புனை திருந்துஅடிக் கள்வர் கோமான்**
**மழபுலம் வணக்கிய மாவண் புல்லி**
**விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்,**
**பழகுவர் ஆதலோ அரிதே - முனாஅது**
**முழவுஉறழ் திணிதோள் நெடுவேள் ஆவி** 15

*அகநானூறு பாடல் 61*

***" வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ அருநிறத்து அழுத்திய அம்பினர் பலருடன் "(அகம் 61)***

*பசிய காலும் மாண்புறும் வரியும் உடைய வலிய வில்லானது சிறுது காலம் கூட தழைக்காது, தொடந்து முழங்கும் முயற்சியோடு தனது வில்லிலே நாணைப்பூட்டி எதிரிகளின் மார்புகளில் அம்புகளை பாய்ச்சுகின்ற கள்வர்களின் தலைமகனாக விளங்கும் மாவண் புல்லி என மாமூலனார் கள்வர்களின் போர்த்தொழிலை வர்ணிக்கிறார்.*

***" அண்ணல் யானை வெண்கோடு கொண்டு நறவுநொடை நெல்லின் நாண்மகிழ் அயரும் கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்" (அகம்61)***

*தலைமை வாய்ந்த யானைகளின் வெள்ளிய கோடுகளை(தந்தங்களை) , கள்ளோடு விற்று அதனால் கிடைத்த நெல்லை கொண்டு, நாளோக்கச் சிறப்பினை செய்யும், கழலினை தரித்த திருந்திய அடிகளை உடைய கள்வர்களின் கோமான் புல்லி என மாமூலனார் புல்லியை போற்றுகிறார்.*

***" மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்" (அகம் 61)***

*மழவர்களை அடக்கி வென்று அவர்களிடம் திறை பெற்ற மிக்க வலிமையுடைய, புல்லி என்பவனின் திருவிழாக்களால் சிறப்புறும் வேங்கடம் என, புல்லியின் பேராண்மையையும், அவன் ஆட்சி செய்த வேங்கடமலையின் சிறப்பினை மாமூலனார் புகழ்கிறார்.*



**197. நீடு வாழ்வாராக அவர்!**

தொல் கவின் தொலைய, தோள் நலம் சாஅய,
நல்கார் நீத்தனர் ஆயினும், நல்குவர்;
நட்டனர் வாழி – தோழி, – குட்டுவன்
அகப்பா அழிய நூறி, செம்பியன்
பகல் தீ வேட்ட ஞாட்பினும் மிகப் பெரிது
அலர் எழச் சென்றனர் ஆயினும் – மலர் கவிழ்ந்து
மா மடல் அவிழ்ந்த காந்தள் அம் சாரல்,
இனம் சால் வயக் களிறு பாந்தட் பட்டெனத்,
துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்
நெடு வரை விடரகத்து இயம்பும்
கடு மான் புல்லிய காடு இறந்தோரே. – *மாமூலனார் நற் 14*

*நற்றிணை பாடல் 14*

***“இனம் சால் வயக் களிறு பாந்தட் பட்டென,***

***துஞ்சாத் துயரத்து அஞ்சு பிடிப் பூசல்***

***நெடு வரை விடரகத்து இயம்பும்***

***கடு மான் புல்லிய காடு இறந்தோரே”***

***(நற்றிணை பாடல் 14)***

*கடிய குதிரையை உடைய புல்லி என்பவரின் நாட்டிலுள்ள காட்டின் வழியாக தலைவி சென்றதாக மாமூலனார் உரைக்கிறார்.*

எனப்தாம்.

## 27. மடவை மன்ற நீயே!

**பாடியவர்:** மதுரைக் கணக்காயனார். **திணை:** பாலை. **துறை:** செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** பாண்டியர்.

("தோழி! நம் தலைவர் கானம் கடுமையானது எனவும் கருதார். நாம் அழுமாறு 'பொருள் விரும்பிச் செல்கின்றேன்' என்றனரே" என்கிறாய். நீ மிகவும் மடமையுடையவள். நின் கண்களின் மாறுபட்ட பார்வை எங்ஙனம் அவரைப் போகவிடும்? அவர் போகார்காண்! இவ்வாறு கூறித் தேற்றுகிறாள் தலைவியின் தோழி.)

"கொடுவரி இரும்புலி தயங்க, நெடுவரை
ஆடுகழை இருவெதிர் கோடைக்கு ஒல்கும்
கானம் கடிய என்னார், நாம்அழ,
நின்றதுஇல் பொருட்பிணிச் சென்றுஇவண் தருமார்,
செல்ப" என்ப, என்போய்! நல்ல 5

மடமை மன்ற நீயே; வடவயின்
வேங்கடன் பயந்த வெண்கோட்டு யானை,
மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்
கொற்கைஅம் பெருந்துறை முத்தின் அன்ன
நகைப்பொலிந்து இலங்கும் எயிறுகெழு துவர்வாய் 10

தகைப்பத் தங்கலர் ஆயினும், இகப்ப
யாங்ஙனம் விடுமோ மற்றே - தேம்படத்





தெள்நீர்க்கு ஏற்ற திரள்காற் குவளைப்
பெருந்தகை சிதைத்தும், அமையா பருந்துபட
வேந்துஅமர்க் கடந்த வென்றி நல்வேல் 15

குருதியொடு துயல்வந் தன்னநின்
அரிவேய் உண்கண் அமர்த்த நோக்கே!

*அகநானூறு பாடல் 27*

***” வடவயின் வேங்கடன் பயந்த வெண்கோடு யானை, மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும் கொற்கை ”***
***( அகம் 27)***

*வடதிசையில் உள்ள வேங்கடத்து மன்னன் அளித்த போர்யானைகளை உடைய , வீரப்போரில் வல்லவர்களான பாண்டியர்கள் அறம் காத்த கொற்கை என புலவர் மதுரை கணக்காயனார், பாண்டியர்களின் புகழ் பாடுகிறார். சங்ககாலத்தில் கொற்கை துறைமுகம் சிறந்து விளங்கியதையும், புல்லி மற்றும் பாண்டியர்களுக்கு இடையே உள்ள சுமூக உறவையும் இந்த பாடல் உணர்த்துகிறது. மதுரை கணக்காயனாரின் மகனாரான நக்கீரர், பாண்டியன் நெடுஞ்செழியனை பற்றி பாடியுள்ளதால், இப்பாடலில் குறிப்பிடப்படும் பாண்டிய மன்னன், தலையாலங்கானத்து போரில் வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என உணர்த்தும்.*

***” பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான் எழுஉறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன் நேரா எழுவர் அடிப்பட கடந்த ஆலங்கானத்து அர்ப்பினும் பெரிது மாஅல் யானை மறப்போர்ப் புல்லி காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்”(அகம் 209)***

## 209. நினையாது இருத்தலோ அரிதே!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது; பிரிவிடை வேறுபட்ட தலைமகளை வற்புறுத்தும் தோழி சொல்லியது எனவும் பாடம். **சிறப்பு:** பாண்டியன் நெடுஞ்செழியனின் ஆலங்கானப் போர்; கள்வர் கோமான் புல்லியின் வேங்கட நெடுவரை; முள்ளூர்க்கு மன்னனான காரி ஓரியைக் கொன்று கொல்லியைச் சேரர்களுக்குத் தந்தது; கொல்லிப் பாவையின் பேரழகு முதலியன,

*(தலைமகனின் பிரிவினால் வாடி மெலிந்திருக்கும் தலைவிக்குத் தோழி, அவளை ஆற்றுவித்து அமைதி கொள்ளச் செய்வது கருதி இப்படி உரைக்கின்றாள். ‘எத்துணைச் செல்வமும் புகழும் பிறவும் பெற்றாலும், நின்னுடைய பேரெழிலை அவர் நினையாதிருத்தல் அரிது’ என்று சொல்லும் தோழியின் சொல் நயத்தினை இச் செய்யுளிற் காணலாம்.)*

**‘தோளும் தொல்கவின் தொலைந்தன; நாளும்**
**அன்னையும் அருந்துயர் உற்றனள், அலரே,**
**பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்,**
**எழுஉறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்,**
**நேரா எழுவர் அடிப்படக் கடந்த** 5
**ஆலங் கானத்து ஆர்ப்பினும் பெரிது என,**
**ஆழல் வாழி, தோழி!-அவரே,**
**மாஅல் யானை மறப்போர்ப் புல்லி**
**காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்**
**அறைஇறந்துஅகன்றனர் ஆயினும், நிறைஇறந்து** 10

*அகநானூறு பாடல் 209*

*பொன் தகடுகள் வேய்ந்த நீண்ட தேரினை உடையவர் தென்னர் கோமான் நெடுஞ்செழியன். கணைய மரத்தை போன்ற திரண்ட தோள்களையும், நீண்ட தேரினையும் உடைய பாண்டியன் நெடுஞ்செழியன் தலையானங்கானத்து போரில் எழுவரை வீழ்த்தியதாக பாண்டியனின் வீரத்தைதை புலவர் புகழ்ந்து பாடியுள்ளார்.*

*இதே பாடலில் " மதம் கொண்ட யானைகளையும் , மிகுந்த போர்வன்மையும் கொண்ட புல்லி என்பானது மூங்கில்களை உடைய நீண்ட சாரல்களை உடைய வேங்கடமலை " என புல்லியின் போர்திறனை கல்லாடனார் போற்றியுள்ளார்.*

***" களிற்றுக்கன்று ஒழித்த உவகையர் கலிசிறந்து கருங்கால் மராஅத்து கொழுங்கொம்பு பிளந்து நறவுநொடை நல்இல், பதவுமுதற் பிணிக்கும் கல்லா இளையர் பெருமகன் புல்லி வியன்தலை நல்நாட்டு வேங்கடம்"***

***( அகம் 83)***

## 83. கூம்புவிடு நிகர் மலர்!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** கள்வர் கோமான் புல்லி, வேங்கடத்துத் தலைவன்.





(பொருள் விரும்பிச் சென்ற தலைமகன், இடைவழியிலே தன் காதலியின் நினைவு நெஞ்சிலே மிகுந்துவிட, 'நாம் பிரிந்து தொலைவிலே வந்தோமெனினும், அவள் குணங்கள் எம் மனத்துள் அகலாது நிலைத்து இருக்கின்றனவே' என்கின்றான்.)

வலம்சுரி மராஅத்துச் சுரம்கமழ் புதுவீச்
சுரிஆர் உளைத்தலை பொலியச் சூடி,
கறைஅடி மடப்பிடி கானத்து அலறக்,
களிற்றுக் கன்றுஒழித்த உவகையர், கலிசிறந்து,
கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து, 5

பெரும்பொழி வெண்நார் அழுந்துபடப் பூட்டி,
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்,
நறவுநொடை நல்இல் பதவுமுதற் பிணிக்கும்
கல்லா இளையர் பெருமகன் புல்லி
வியன்தலை நல்நாட்டு வேங்கடம் கழியினும், 10

சேயர் என்னாது, அன்புமிகக் கடைஇ,
எய்தவந் தனவால் தாமே – நெய்தல்
கூம்புவிடு நிகர்மலர் அன்ன
ஏந்துஎழில் மழைக்கண்எம் காதலி குணனே!

*அகநானூறு பாடல் 83*

*மணங்கமழும் வெண்கடம்பின் பூக்களை சுருள்போன்ற தன் தலைமயிரில் சூடிக்கொண்டு , உரல் போன்ற காலினை உடைய பெண் யானையிடமிருந்து களிற்று கன்றை பிரித்து கூட்டி வருவர் கள்வர்கள்! வெண்கடம்பு மரத்தின் நாரைக்கொண்டு யானைக்கன்றை கட்டுவர். அத்தகைய இளையர்களுக்கு பெருமகன், கள்வர் கோமான் புல்லி யின் அழகிய கொடிகளையுடைய வேங்கடமலை என வேங்கடமலையின் சிறப்பினை உணரத்துகிறார் கல்லாடனார். இளையர் என்பவர் சங்ககால போர்க் குடியினர் என சென்னை பல்கலைக்கழக ஆய்வு நூல் மூலம் உறுதிப்படுத்தியுள்ளது. ( Chronology of early tamils/ chennai universiry 1932)*

***” நரந்த நறும்பூ நாள்மலர் உதிரக் கலைபாய்ந்து உகளும், கல்சேர் வேங்கைத் தேம்கமழ் நெடுவரை பிறங்கிய வேங்கட வைப்பிற் சுரன் இறந்தாரோ”( அகம் 141)***

---

நெஞ்சும் நனிபுகன்று உறையும்: எஞ்சாது
உலகுதொழில் உலந்து, நாஞ்சில் துஞ்சி.

மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர, மதி நிறைந்து,
அறுமீன் சேரும்அகல்இருள் நடு நாள்:
மறுகுவிளக் குறுத்து, மாலை தூக்கிப்,
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய

விழவுஉடன் அயர, வருகதில் அம்ம!
துவரப் புலர்ந்து தூமலர் கஞலித்,
தகரம் நாறுந் தண்நறுங் கதுப்பின்
புதுமண மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ,

கூழைக் கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ்செய் நெல்லின் வாங்குகதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கைக்
கடிதுஇடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை ஓங்குமடல் இராது;

நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற்று அன்ன
நல்லிசை வெறுக்கை தருமார், பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை

நரந்த நறும்பூ நாள்மலர் உதிரக்,
கலைபாய்ந்து உகளும், கல்சேர் வேங்கைத்,
தேம்கமழ் நெடுவரைப் பிறங்கிய
வேங்கட வைப்பிற் சுரன்இறந் தோரே.

*அகநானூறு பாடல் 141*

*கற்பாறையிடையே வளர்ந்த வேங்கையை போல புள்ளிகளை உடைய பூவின் இடையே அன்று பூத்த நாரத்தையின் மலர்கள் உதிரும்படி, முசுக்கலை என்ற ஆண் குரங்குகள் பாய்ந்து துள்ளும், நெடிய மலைத்தொடரை கொண்ட வேங்கட மலை வேங்கடத்தின் அழகை நக்கீரர் விவரிக்கிறார்.*

***"திண்நிலை மறுப்பின் வயக்களிறு உரிதொறும் தண் மலை , ஆலயின் தாஅய் உழவர், வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும் பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்"(அகம் 211)***

## 211. நீரின் ஒளியும் ஊரலரும்!

**பாடியவர் :** மாமூலனார். **திணை :** பாலை. **துறை:** பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது. **சிறப்பு:** எழினியின் பற்களைப் பறித்து வந்து வெண்மணிவாயில் என்னும் இடத்திலே மத்தி என்பவன் பதித்து வைத்ததும், வேங்கடமலையின் சிறப்பும் பற்றிய செய்திகள்.

(தலைவியைத் தலைவன் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் சென்றிருந்தான். அவன், 'வருவேன்' என்று உறுதிகூறிச் சென்ற கார் காலமும் வந்து கழிந்தது. ஆனால், அவன் அப்போதும் வரவில்லை. அதனால், தலைவியின் ஏக்கமும் மெலிவும் அதிகமாகத், தோழி 'அவன் தவறாது வருவான்' எனத் தலைவிக்கு ஆறுதல் கூறுகிறாள்.)



**கேளாய், எல்ல! தோழி-வாலிய**
**சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்**
**பறைகண் டன்ன பாவடி நோன்தாள்**
**திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிஞுதொறும்,**
**தண்மழை ஆலியின் தாஅய், உழவர்** 5

**வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும்**
**பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்,**
**மொழிபெயர் தேஎத்தர் ஆயினும், நல்குவர்-**
**குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை**
**பிடிபடு பூசலின் எய்தாது ஒழியக்,** 10

**கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி,**
**நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தாரப் பட்ட**
**கல்லா எழினி பல்லெறிந்து அழுத்திய**
**வன்கண் கதவின் வெண்மணி வாயில்,**
**மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை,** 15

**நீர்ஒலித் தன்ன பேஎர்**
**அலர்நமக்கு ஒழிய, அழப்பிரிந் தோரே.**

*அகநானூறு பாடல் 211*

*வலிமை பெற்ற களிறானது, வெண் கடம்பு மரத்தில் உராயும் போது, பரவும் கடம்பின் பூக்கள், மழைக்காலத்தில் பெய்யும் பனியை போல எங்கும் பரவிக்கிடக்கும். அப்படி உதிர்ந்த பூக்கள் பாறைகளில் காய்ந்து இருக்கும். இத்தகைய குளிர்ச்சி பொருந்திய சோலைகளை கொண்ட வேங்கடமலை என புல்லியின் தேசத்தை மாமூலனார் எடுத்துரைக்கிறார்.*

***" வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர் இனமழை தவழும் ஏற்றரு நெருங்கோட்டு ஓங்குவெள், அருவி வேங்கடத்து உம்பர்"( அகம் 213)***

## 213. சுவர்க்கமும் அமிழ்தும்!

**பாடியவர்:** தாயங் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது. **சிறப்பு:** வடுகர் இடுகின்ற நாட்பலி; வானவனின் கொல்லிக் குடவரையின் மூங்கில், காவிரியின் அறல் பட்ட மணல், ஆகியவை பற்றிய செய்திகள்.

(பிரிந்து சென்ற தலைவன், குறித்த காலம் கடந்தும் மீளாதவனாக வருந்திய தலைவிக்கு, அவளுடைய தோழி, அவனுடைய காதல் உறுதியைக் கூறி, அவன் வருவான் என வற்புறுத்தி, இப்படித் தேறுதல் உரைக்கின்றாள்.)

**வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்**
**இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு**
**ஓங்குவெள் அருவி வேங்கடத்து உம்பர்க்,**





**கொண்குழை அதிரல் வைகுபுலர் அலரி**
**சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி,** 5

*அகநானூறு பாடல் 213*

*போர் பயிற்சி பெற்ற யானைகளை கொண்ட தொண்டையர் வாழும் வேங்கடமலையானது, மேகங்கள் தவழும், வெண்மையான அருவிகள் விழும் மலை உச்சிகளை உடையது என வேங்கடத்தின் அழகை தாயங்கண்ணனார் புகழ்கிறார்.*

***"ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும் புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து"***
***(அகம் 295)***

நிலம்நீர் அற்று நீள்சுனை வறப்பக்
குன்றுகோடு அகையக், கடுங்கதிர் தெறுதலின்,
என்றூழ் நீடிய வேய்படு நனந்தலை,
நிலவுநிற மருப்பின் பெருங்கை சேர்த்தி,
வேங்கை வென்ற வெருவரு பணைத்தோள்

ஓங்கல் யானை உயங்கி, மதம் தேம்பிப்
பல்மர ஒருசிறைப் பிடியொடு வதியும்
கல்லுடை அதர கானம் நீந்திக்
கடல்நீர் உப்பின் கணஞ்சால் உமணர்
உயங்குபகடு உயிர்ப்ப அசைஇ, முரம்பு இடித்து

அகல்இடம் குறித்த அகல்வாய்க் கூவல்
ஆறுசெல் வம்பலர் அசைவிட ஊறும்,
புடையலம் கழற்கால் புல்லி குன்றத்து,
நடைஅருங் கானம் விலங்கி, நோன்சிலைத்
தொடைஅமை பகழித் துதன்றுநிலை வடுகர்,

பிழிஆர் மகிழ்நர், கலிசிறந்து ஆர்க்கும்
மொழிபெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்,
பழிதீர் மாண்நலம் தருகுவர் மாதோ;
மாரிப் பித்திகத்து ஈர்இதழ் புரையும
அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்,

மணங்கமழ் ஐம்பால், மடந்தை! நின்
அணங்குநிலை பெற்ற தடமென் தோளே!



*அகநானூறு பாடல் 295*

*ஒலிசெய்யும் வீரக்கழல் அணிந்த காலினனான புல்லி என்பானது குன்றமான வேங்கடம் என மாமூலனார் புல்லியின் வேங்கடமலையை குறிப்பிடுகிறார்.*

***" வருவழி வம்பலர் பேணிக் கோவலர் மழவிடை பூட்டிய குழாஅய் தீம்புளி செவியடை தீரத தேக்கிலைப் பகுக்கும் புல்லி நன்னாட்டு உம்பர்"(அகம் 311)***

## 311. நீடலர் அவர்!



**பாடியவர்** : மாமூலனார். **திணை** : பாலை **துறை** : பிரிவின்கண் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.
**சிறப்பு** : புல்லியின் நாட்டைப் பற்றிய குறிப்பு.

(தலைவன் பொருளீட்டி வருதலின் பொருட்டாக வேற்று நாட்டிற்குச் சென்றனன். தலைவி அவன் பிரிவினைத் தாங்கவியலாதவளாய் நோயுற்றனள். அவன் மீள்வதாகக் குறித்த அந்தக் காலம் வரையினும் ஒருவாறு அடங்கியிருந்ததேனும், அவன் குறித்துச் சென்ற காலத்தும் வாராது போகவே, தலைவியின் துயரமும் அளவிற்கடங்காப் பேரளவினதாயிற்று. அவ்வேளை, அவளுடைய ஆருயிர்த் தோழியானவள், அவளைத் தேற்றுவாளாக, இவ்வாறு சில கூறுகின்றனள்.)

**இரும்பிடிப் பரிசிலர் போலக் கடைநின்று**
**அருங்கடிக் காப்பின் அகனகர் ஒருசிறை**
**எழுதி யன்ன திண்ணிலைக் கதவம்**
**கழுதுவழங்கு அரைநாள் காவலர் மடிந்தெனத்**
**திறந்துநப் புணர்ந்து 'நும்மிற் சிறந்தோர்** 5

**இம்மை உலகத்து இல்'லெனப் பன்னாள்**
**பொம்மல் ஓதி நீவிய காதலொடு**
**பயந்தலை பெயர்ந்து மாதிரம் வெம்ப**
**வருவழி வம்பலர்ப் பேணிக் கோவலர்**
**மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி** 10

**செவியடை தீரத தேக்கிலைப் பகுக்கும்**
**புல்லி நன்னாட்டு உம்பர் செல்லருஞ்**
**சுரமிறந்து ஏகினும் நீடலர்**
**அருண்மொழி தேற்றிநம் அகன்றிசி னோரே!**

*அகநானூறு பாடல் 311*

*வழிப்போக்கர்களின் பசியினை தீர்க்கும் பொருட்டு, தங்களது பசு கன்றுகளின் கழுத்திலே தொங்கும் குழாய்களில் அடைக்கப்பட்டுள்ள புளிச்சோற்றினை , கோவலர் பகிர்ந்து அளிப்பர். அத்தகைய ஈகை தன்மை கொண்ட மக்கள் வாழும் புல்லி என்பான் காத்து வரும் வேங்கட நன்னாடு என என மாமூலனார், கோவலர்களின் நற்குணத்தையும், புல்லி என்பவன் வேங்கட நாட்டை காத்தருள்வதையும் புகழ்ந்துள்ளார்.*

***" வீழ்ப்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை, சூர்புகழ் அடுக்கத்து, மழைமாறு முழங்கும் பொய்யா நல்லிசை மாவண் புல்லி" (அகம் 359)***

பனிவார் உண்கணும் பசந்த தோளும்
நனிபிறர் அறியச் சாஅய நாளும்
கரந்தனம் உறையும் நம்பண்பு அறியார்
நீடினர் மன்னோ காதலர்' எனநீ
எவன்கை யற்றனை? - இகுளை!-அவரே

வான வரம்பன் வெளியத்து அன்னநம்
மாணலம் தம்மொடு கொண்டனர் - முனாஅது
அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்
பெருங்கல் மீமிசை இயம்எழுந் தாங்கு
வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை

சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்
பொய்யா நல்லிசை மாவண் புல்லி
கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்
முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை
அருவித் துவலையொடு மயங்கும்

பெருவரை அத்தம் இயங்கி யோரே!



*அகநானூறு பாடல் 359*

*நெடிய கால்களை உடைய களிற்றியானையானது, தெய்வங்கள் வாழும் மலை பக்கத்தே, இடியோடு மாறுபட முழங்கும் இடமான பரிசிலர்க்கு பொய்யாத நல்ல புகழினையும், சிறந்த வண்மையையும் உடைய புல்லி யின் வேங்கடம் என மாமூலனார் புகழ்கிறார்.*

***" மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும் நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி தேன்தூங்கு உயர்வரை நல்நாட்டு உம்பர் வேங்கடம்" (அகம் 393)***

கோடுயர் பிறங்கற் குன்றுபல நீந்தி
வேறுபுலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய
முதைச்சுவற் கலித்த ஈர்இலை நெடுந்தோட்டுக்
கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி

கவட்டடிப் பொருத பல்சினை உதிர்வை
அகன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ
வரியணி பணைத்தோள் வார்செவித் தன்னையர்
பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்பச்
சுழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்

தொடிமாண் உலக்கை ஊழின் போக்கி
உரல்முகம் காட்டிய சுரைதிறை கொள்ளை
ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவாக்
களிபடு குழிசிக் கல்லடுப்பு ஏற்றி
இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதிற்

குடவர் புழுக்கிப் பொங்கவிழ்ப் புன்கம்
மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங்கு உயர்வரை நல்நாட்டு உம்பர்
வேங்கடம் இறந்தனர் ஆயினும் ஆண்டவர்

நீடலர் - வாழி தோழி! - தோடுகொள்
உருகெழு மஞ்ஞை ஒலிசீர் ஏய்ப்பத்
தகரம் மண்ணிய தண்ணறு முச்சிப்
புகரில் குவளைப் போதொடு தெரிஇதழ்
வேனில் அதிரல் வேய்ந்தநின்
ஏமுறு புணர்ச்சி இன்துயில் மறந்தே.



*அகநானூறு பாடல் 393*

*இடையர்கள் வெண்மையான அரசியை உலக்கையால் குத்தி, மண்பானையில் ஏற்றி அவிலாழிகிய சோற்றினை ஆக்குவர்.இக்காட்சிகள் நித்தம் நடைபெறும் , தேனிறால் தொங்கும் உயர்ந்த பாறைகளையுடைய மங்காத புகழ் கொண்ட புல்லி என்பானது வேங்கட நன்னாடு என வேங்கடத்தின் புகழை மாமூலனார் பாடுகிறார்.*

***"புல்லிய வேங்கட விறல்வரைப் பட்ட ஓங்கல் வானத்து உறையினும் பலவே"(புறம் 385)***

*அம்பர் கிழான் என்வனை வாழ்த்தும் கல்லாடனார், புல்லியின் வேங்கடமலையில் வீழ்ந்த மழைத்துளியினும் பல ஆண்டுகள் வாழவேண்டும் என வாழ்த்துகிறார்.*

***வேங்கடமும் புல்லியும்......***

*பல்வேறு புலவர்களால் கள்வர் கோமான் புல்லியின், வீரம், கொடை ஆகிய பண்புகள் பாடப்பட்டுள்ளது. புல்லியின் வேங்கடம் போர்யானைகளால் சிறந்திருந்தது என்றும், புல்லியின் வேங்கடநாட்டை கடந்தால் அங்கு வேற்றுமொழியினர் வாழ்ந்ததாக அறிகிறோம். பாண்டியர்களின் யானைப்படை மாமன்னர் புல்லியால் அளிக்கப்பட்ட யானைகளை கொண்டிருந்தது. புல்லி நாட்டின் வீரர்கள் தாம் வாங்கும் பொருட்களுக்கு யானையையும், யானைத் தந்தங்களையும் விலையாக கொடுத்துள்ளனர். புல்லியின் வேங்கடம் விழாக்களால் சிறந்துள்ளது. புல்லியின் ஆட்சி வேங்கநாடு முதல் மழநாடு வரையிலும் பரவியிருந்தது. வேங்கடமலை மக்களை தொண்டையர் என கல்லாடனார் போற்றுகிறார். புல்லியை பற்றி பாடப்படும் அனைத்து பாடல்களும் பாலைத்திணை வகையை சேர்ந்தவையாக உள்ளன.*

*வீரர்கள் பலருடன் கானகம் சென்று, களிறு வேட்டையாடும் புல்லி, யானை தந்தங்களையும், அதனை விற்பதன் மூலம் கிடைக்கும் நெல்லையும் , புலவர்களுக்கு அளித்து மகிழ்ந்துள்ளார்.*

*புல்லிநாட்டின் ஆயர்கள் வரகு அரிசியால் சமைத்த உணவை பாலில் கலந்து விருந்தினருக்கு கொடுத்து மகிழ்வர். கோடையின் வெம்மையில் நீர்நிலைகள் வற்றியிருக்கும் காலத்தில், வேங்கட நாட்டின் வழிபோக்கர்களுக்கு , எருதுகளின் கழுத்தில் கட்டியிருக்கும் புளிச்சோற்றை தேக்கு இலையில் வைத்து ஆயர்கள் அளிப்பார்கள்.*

*வந்தோர்க்கு இல்லையென கூறாது வாரி வழங்கும், கள்வர் கோமான் புல்லியை புலவர்கள் " பொய்யா நல்லிசை மாவண் புல்லி" என்றும் "நெடுமொழிப்புல்லி" என்றும் பாராட்டுகின்றனர்.*

***கள்வர் கோமான் புல்லியின் கருநாடகப் படையெடுப்பு***

*வேங்கடமலையை ஆட்சி செய்த கள்வர் கோமான் புல்லி மழநாட்டையும் பணியச் செய்துள்ளார் என அகநானூறு பாடல் 61 கூறுகிறது. சங்க கால மழநாட்டை அதியமான் எனும் சேர மரபினர் ஆட்சி செய்து வந்தனர். அவர்களை வீழ்த்திய கள்வர் கோமான் புல்லி கிருஷ்ணகிரி, தர்மபுரி, சேலம், நாமக்கல் வரை தனது ஆட்சிப்பரப்பை*

*விரிவாக்கியுள்ளார்.( களப்பிரர்கள்/ நடனகாசிநாதன் Pg 4).தெற்கு நோக்கி நகர்ந்த வேங்கடமலைக் கள்வர்கள் பெங்களூரு வரையிலும் ஆளுமை செலுத்தியுள்ளனர்.*

**சங்ககாலத்தில் களப்பிரர்**

சங்ககாலத்தில் கள்வர் கோமான் **புல்லியைப்** பற்றிய செய்தி காணப்படுகிறது. அவன் வேங்கட மலைக்குத் தலைவன் என்றும் தமிழ்ப் புலவர்களுக்கு வரையாது வழங்கிய வள்ளல் என்றும் புகழப்படுகிறான். அவ்வேங்கடமலை மொழி பெயர் தேயத்தைச் சேர்ந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## களப்பிரர் :- தமிழக தொல்லியல் துறை

---





"புடையலங் கழற்காற் **புல்லி** குன்றத்து
நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்
பிழியார் மகிழர் கலிசிறந் தார்க்கு
மொழிபெயர் தேஎயம்" (அகம். 295.)

என்ற அகப்பாட்டால் மேற்கூறப்பெற்ற உண்மைகள் புலனாகின்றன. அப்புல்லியானவன் மழநாட்டை வென்றவன் என்பதை மற்றொரு அகப்பாடல் கீழ்க்காணுமாறு எடுத்துரைக்கின்றது.

"கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்." (அகம். 61.)

மழநாடு என்பது தற்காலத்திய தர்மபுரி, சேலம் மாவட்டங்கள் அடங்கிய பகுதியாகும். இப்பகுதி புல்லியின் நாட்டுக்கு அண்மையிலிருந்த காரணத்தினால் அவன் வென்றிருக்கிறான். இதனையும் தன்னாட்சியின் கீழ் கொண்டு வந்திருக்கிறான். மழநாட்டை அதியர்கள் ஆண்டு வந்திருக்கின்றனர். சங்க காலத்தில் அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் அதியர் மன்னன் தகடூரைத் தலைநகராகக்கொண்டு ஆட்சி புரிந்திருக்கிறான். அவன் வழியில் வந்த ஒருவனை வென்று புல்லி இப்பகுதியைக் கைப்பற்றியிருக்கக்கூடும். ஆதலால்தான் அவன் மழநாடு வென்றமை பற்றி புகழ்ந்து பேசப்படுகிறது.

## *கர்நாடகத்தில் பண்டைய தமிழக பகுதிகள்*

*இளங்கோ அடிகள் தாம் பாடிய சிலப்பதிகாரத்தில் தமிழகத்துக்கு வேங்கட மலையை வட எல்லையாகவும், கடலைத் தென் எல்லையாகவும் காட்டியுள்ளார்.*

***நெடியோன் குன்றமும் தொடியோள் பெளவமும்***
***தமிழ் வரம்பறுத்த தண்புனல் நல்நாட்டு***

*(சிலப்பதிகாரம்,வேனிற்காதை)*

*சிலப்பதிகாரத்தின் காலம் கிபி 2 ஆம் நூற்றாண்டு என்பது பொதுவான ஆய்வாளர்களின் கணிப்பு. இக்காலத்தில் தமிழகத்தின் வட எல்லையாக வடவேங்கடமும் தெற்கு, கிழக்கு மற்றும் மேற்கு எல்லைகள் கடலாக இருந்துள்ளது. அதாவது தமிழக பகுதிகள் மைசூர், பெங்களூர் முதலிய இன்றைய கர்நாடக பகுதிகளையும் உள்ளடக்கி இருந்தது.*

*தமிழகத்தின் வட எல்லையில் இருந்த கர்நாடக பகுதிகள் பண்டைய காலத்தில் எருமை நாடு என அழைக்கப்பட்டது. அகநானூறு பாடல் 115, " எருமை குடநாடு " எனும் பகுதியை குறிப்பிடுகிறது. குடநாடு என்பது மேற்கு நாடு என பொருள்படும். இது சேரநாட்டின் வடபால் அமைந்திருந்த நாடாகும்.எருமை எனும் மன்னரின் ஆட்சியில் குடநாட்டின் பகுதிகளும் இருந்ததை இப்பாடல் விளக்குகிறது.*

சங்ககாலத்தில் அந்நாட்டிற்கு 'எருமை நன்னாடு' என்று வழங்கியதை அகநானூற்றால் (அகம்-253) அறிகின்றோம்.

''நாரறி நறவின் எருமை யூரன்''

—அகம்-35

''எருமை குடநாடு''

—அகம்-115

என்ற சங்ககால வழக்காறுகள் இதனை உறுதிப்படுத்தும்; இவை சங்ககாலத்தில் மைசூருக்கு வழங்கப்பெற்ற பெயர்களாகும். இவற்றுள் 'எருமை குட நாடு' என்ற தொடர் கவனத்திற்குரியது. தொல்காப்பியம் என்ற தொல்லிலக்கணப்படி செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தில் செந்தமிழ்மொழி வழங்கி வந்தது. உரையாசிரியர்கள் இந்த நாடுகளின் பெயர்களையும் கூறியுள்ளனர்.

தென்பாண்டி குட்டம் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன் வடக்கு—நன்றாய
சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.



என்ற நன்னூல் விருத்தியுரையில் (நூற்பா-273) காணப்பெறும் வெண்பா இப்பன்னிரு நாட்டின் பெயர்களையும் குறிப்பிடுவதை அறியலாம். இவற்றுள் 'குட நாடு' என்ற பெயர் 'மேற்கு நாடு' என்று பொருள் தரும் தொடராகும். கேரளமும் கர்நாடகமும்-தமிழகத்தின் மேற்குத் திசையில் உள்ளவை. ஆகவே, குடநாடு என்பது இந்த இரண்டும் சேர்ந்த நாட்டையோ அல்லது தனித்தனியாக இவற்றுள் ஒன்றையோ குறிப்பிடும் தொடர் என்றாகின்றது. எனவே, சேரர் குடநாட்டினின்றும் பிரித்தறிவதற்காகவே 'எருமை குடநாடு' என்ற தொடர் வழங்கப்

*தொல்காப்பியர் தம் பாடலில் செந்தமிழ் வழங்கிய நாடுகள் பன்னிரண்டு என்று கூறுகிறார்.*

***"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்***
***தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி"***
***(தொல்.சொல், 400)***

*தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய இளம்பூரணர், அப்பன்னிரு நாடுகள் இவை என்று குறிப்பிடுகிறார்.*

***"தென்பாண்டி, குட்டம், குடம் கற்கா, வேண், பூழி ,***
***பன்றி, அருவா, அதன் வடக்கு , நன்றாய***
***சீதம், மலாடு, புனல் நாடு, செந்தமிழ்சேர்***
***ஏதம் இல் பன்னிரு நாட்டு எண்"***

*தமிழ் வழங்கப்பட்ட பன்னிருநாடுகளில் குடநாடும் குறிப்பிடப்பட்டுள்ளது. குடநாடு அகநானூற்றில் எருமை குடநாடு என குறிப்பிடப்பட்டதை கண்டோம்.*

*புறநானூற்று பாடல்கள் 273, 303 ஆகியவற்றை எருமை வெளியனார் எனும் தமிழ் புலவர் எழுதியுள்ளார். அகநானூற்றில் பாடல் 72, எருமை வெளியனார் மகனார் கடலனார் என்பவர் எழுதியுள்ளார். இதன் மூலம் எருமை நாட்டுப் பகுதியில் பண்டைய காலத்திலேயே செந்தமிழ் புலவர்கள் வாழ்ந்து வந்துள்ளதை அறியலாம்.*

*புதுக்கோட்டை மாவட்டம் சித்தன்னவாசலில் கிடைத்த பழமையான தமிழி கல்வெட்டில்*

## கல்வெட்டு 13:1

> எருமிநாடு குமுழ்ஊர் பிறந்த காவுடி ஈ
> தென்குசிறுபோசில் இளயர் செய்த அதிட்அனம்

என்பது கல்வெட்டு வாசகம்.எருமி நாட்டு குமிழூரில் பிறந்த காவுடிக்கு தெற்கு சிறுபோசிலைச் சேர்ந்த இளயர் செய்து கொடுத்த இருப்பிடம் என்பது இதன் பொருள்.



### பாடபேதம்

ஏ உமி நாடு குமுத்த ஊர் பிடனதவுதி இதென கு சிதூ போசில இளயர் செய்த அதிடானம்
– கிருஷ்ண சாஸ்திரி

ஏ ஓமி நாடு குமட்டூர் பிறந்த காவுடி இதென்கு சிறுபொசில் இளயர் செய்த அதிதானம்
–சுப்பிரமணிய அய்யர்

எவுமி நாட்ட குழுட்டூர் பிட்த கவுடி இதென்கு சித்த பொசில் இளயர் செயதே அதிடானம்
– நாராயணராவ்.

எஓமி நாடு குமுதூ ஊர் பிறந்த காவுடி இதென்கு சிறுபொசில் இளயர் செய்த அதிதானம்
– டி.வி. மகாலிங்கம்.

எருமி நாடு குமிழ் ஊர் பிறந்த காவுடி ஈதேன்கு சிறுபோவில் இளையர் செய்த அதிட்அனம்
– இரா. நாகசாமி.

எருமி நாடு குமுழ் ஊர் பிறந்த கவுடிஇ தென்கு சிறு பொசில் இளயர் செய்த அதிட்அனம்
– ஐ. மகாதேவன்.

எஉமி நாடு குமுடு ஊர் பிறந்த காவுட இதெனகு சிது பொசில் இளயர் செய்த அதிட்அனம்
– சி.சிவராமமூர்த்தி.

எஓமி நாட்டு குமட்டுர் பிறந்தான் காவுடி இதெனுக்கு சிது பொசில் இளையர் செய்த அதிட்டானம்
–கே. ஆர். சீனிவாசன்.

## கல்வெட்டுச்செய்தி

இதில் இடம்பெறும் எருமி நாடு என்பது எருமைநாடு என்றும், சமஸ்கிருதத்தில் மகிஷ மண்டலம் என்றும் அழைக்கப்பெற்ற கன்னட நாட்டினைக் குறிக்கும். அப்பகுதியில் இருந்த ஊர் குமிழூர். இச்சொல் குமிழ் என்று தேக்கு மர வகையின் அடியாகப் பெயர் பெற்றிருக்கலாம். காவிடிஈ என்பது காவுண்டன் என்ற சொல்லின் பெண்பால் பெயர். 'கௌடி' என்ற கன்னடப் பெண் துறவியின் பெயர், தமிழில் காவுடி என்று எழுதப்பட்டுள்ளது. இறுதியில் உள்ள 'இ', பளிஇ, கணிஇ என்ற பிற தமிழ்-பிராமி கல்வெட்டுகளில் வரும் வகையில் இகர இறுதிச் சொல்லான காவுடி என்பதிலும் எழுதப் பெற்றுள்ளது.

*"எருமி நாடு குமுழூர் பிறந்த காவுடி ஈதென்கு சிறு போசில் இளயர் செய்த அதிட்டானம்" (IPS 01)*

என எருமை நாட்டைப் பற்றி குறிப்பிடப்படுகிறது. எருமைநாட்டில் வாழ்ந்த காவுடி எனும் பெண் சமணத் துறவியின் சார்பாக எருமை நாட்டில் சிறுபோசில் எனும் இடத்தில் வாழ்ந்த இளையர்கள், சித்தன்னவாசலில் அதிட்டானம் எனும் அமைப்பை உருவாக்கியுள்ளனர். இக்கல்வெட்டின் காலம் கிமு 1-2 ஆம் நூற்றாண்டு. இந்த காலகட்டத்தில் எருமை நாட்டில்( மைசூரில் தமிழ் போர்குடி வீரர்களாகிய இளையர்கள் வாழ்ந்து வந்ததை இக்கல்வெட்டு உணர்த்துக்கிறது. கள்வர் கோமான் புல்லி, இளையர் பெருமகன் என புகழப்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

சேலம் மாவட்டம், ஒடப்பட்டி எனும் ஊரில் கிடைத்த கல்வெட்டு 212 of 1910 ல் எருமை எறுவாடி என்பவரும் ,குணருண்டை வடுகன் என்பவரும் மான்வேட்டையின் போது இறந்த தகவலை தெரிவிக்கிறது. கங்க மன்னர் ஸ்ரீபுருஷரின் காலத்திய இக்கல்வெட்டில், குறிப்பிடப்படும் எருமை என்பது சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் எருமை நாடாகும்.

**212.** 212 *of* 1910.—(Vaṭṭeḻuttu.) On another slab close to the same. A record in the seventh year of the Western Gaṅga king Śrīpuruśar (Śrīpurusha). Records that a certain Erumai-Eruvāḍi and a certain Kūnarundai-Vaḍugan fell, perhaps in connection





with a deer hunt *(mān-vēṭṭai)*. [Mr. Krishna Sastri believes that the king referred to was the W. Gaṅga Śrīpurusha Muttaraśa (765—805 according to Fleet) and Teḷiniyar was a form of *Eḷini* or Yavanika, a title of the Adiyamāns of Tagaḍūr (i.e., Dharmapuri), who had a territory which bordered the Gaṅga territory and who were therefore engaged in frequent raids. He thinks that the capture of Yeruvāyil ("somewhere near Oḍḍapaṭṭi") by Teḷiniyar must have referred to one of these raids. For the epigraphical evidence to prove that the Adiyamāns had the title of *Eḷini* see *Ep. Ind.*, Vol. VI, p. 331. Erumai is evidently Eṟumaināḍu of Tamil literature and Erumaṟaināḍu of the Hoysaḷa records (See *Ep. Carna.* X, Cu. 20). For the detailed history of the Adiyamāns see *Ep. Rep.*, 1911, pp. 58–9 and *Ibid.*, 1906, p. 74.

*(Topographical list of inscriptions in madras presidency vol 2)*

13 ஆம் நூற்றாண்டை சேர்ந்த ஹய்சள மன்னர் வீரவல்லாளதேவரின் ஆட்சியில், பெங்களூருக்கு அருகில் உள்ள சிக்பல்லாபூர் எனும் ஊரில் கிடைத்த கல்வெட்டில்" வீரவல்லாளரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக " எருமரை நாடு " எனும் பகுதி குறிப்பிடப்படுகிறது. (Epigraphica carnatica vol x)

**20**

*Date 1301 A. D.*[1]

(Tamil) — The pratâpa-chakravatti šrî-Hoyšaḷa-vîra-Vallâḷa-Dêvar intimates the following to the heads of *maṭhas* and *sthânas* in the temples situated in the Hesar-Kuṇḍâṇi kingdom, Virivi-nâḍu, Murаša-nâḍu, Mâšandi-nâḍu, Veppûr, Erumaṟai-nâḍu, Ilaippâkka-nâḍu, Kaḷavâra-nâḍu, Ambaḍakki, Noṇḍaṅguḻi, Kaivâra-nâḍu, Kuvaḷâla-nâḍu, Têkkal-nâḍu, Aimbuḷuga-nâḍu, Elavûr-nâḍu, Eyil-nâḍu, Tagaḍai-nâḍu, Puṟamalai-nâḍu *alias* Adigaimâ-nâḍu, Paiyyûrpparru, Peṇṇaiyâṇḍâr-maḍam, Pulliyûr-nâḍu and all other nâḍus:—

(On the date specified), we have remitted all kinds of taxes (many named) in the gifts to temples etc., — *dêva-dânam, tiruviḍaiy-âṭṭam, maḍappuṟam* and *paḷḷichchandam* — of our kingdom and granted, with pouring of water, certain *vibhavas* for the respective gods, to provide for worship, offerings of rice, enjoyments and temple repairs.

Accordingly, the heads of *maṭhas* and *sthânas* in the temple of the god of Tiru-Nandi, otherwise called Southern Kailâsa, will enjoy, as a *sarva-mânya,* the wet and dry lands with their four boundaries, including the wells underground and the trees overground, which are a dêva-dâna of the god Tiru-Nandîšvaram-uḍaiya-nâyanâr, as well as the dêva-dâna villages of the same god, make adequate provision for the worship, offerings of rice, enjoyments and temple repairs of the god, and live happily, praying for the prosperity of ourselves and our kingdom.



*Erumai nadu in karnataka*

இதன்மூலம் எருமை நாடு எனும் பண்டைய தமிழகப்பகுதி தெற்கு கர்நாடக பகுதிகளை சேர்ந்தது என உறுதியாகிறது.

வேங்கடமலையில் இருந்து ஆட்சி செய்த கள்வர் கோமான் புல்லி , தனது பலத்தால் மழநாட்டின் மேல் படையெடுத்து மழபுலத்தை தன் கட்டுப்பாட்டில் கொண்டு வந்தார். தர்மபுரி, கிருஷ்ணகிரி, ஒசூர் , பெங்களூர் போன்ற மழநாட்டு பகுதிகள் புல்லியின் கட்டுப்பாட்டில் இருந்துள்ளது.

*பெங்களூர் பகுதியிலும் மழவர்கள் ஆளுமை இருந்ததை பெங்களூர் பகுதியில் சென்னப்பட்டினம் தாலுக்காவில் கிடைத்த கண்டராதித்த சோழர் கால கல்வெட்டு இப்பகுதியை பெரிய மழவூர் என குறிப்பிடுகிறது. " கரிகால சோழ வளநாட்டு பெரிய மழவூர் என இப்பகுதி கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறது*(Ep car vol ix)/ *பிற்கால சோழர் சரித்திரம் சதாசிவ பண்டாரத்தார் பக்* 65)

*பெங்களூர் பகுதியில் இருந்த '' பெரிய மழவூர்''*
*பெங்களூரில் புல்லியின் பெயரால் ஊர்:-*

*சங்க காலத்தில் மழநாட்டை அடக்கியாண்ட புல்லியின் அடையாளமாக பெங்களூரில் புல்லியூர் எனும் ஊர் வழங்கி வந்தது குறிப்பிடத்தக்கது.*

*பல்லவன் சிம்மவிஷ்ணுவின் கிபி* 6 *ஆம் நூற்றாண்டை சேர்ந்த ஹோஸ்கோட்டே செப்பேட்டில் பல்லவரின் தாயார் அளித்த கொடை பற்றி குறிப்பிடுகிறது. சிம்மவிஷ்ணுவின் தாயார் கங்க நாட்டில் ( பெங்களூரில்) , கோரிக்குந்தம் எனும் பகுதியில் புல்லியூர் எனும் ஊரில், தான் கட்டிய சமண கோயிலுக்கு அளித்த நிலக்கொடை பற்றி கூறுகிறது.*

  

செந்தலூர்ச் செப்பேட்டில் எழுதப்பட்டுள்ள பழைய தெலுங்கு, கன்னட எழுத்து வடிவத்தில்தான் இந்தச் செப்பேடும் எழுதப்பட்டுள்ளது.

'விஷ்ணுவிற்கு வெற்றி' என்ற மங்கலச் செய்தியுடன் செப்பேடு ஆரம்பிக்கிறது. கொங்கணிவர்ம தர்ம மகாராஜாதிராஜன் கங்க வம்சத்தின் முதல் அரசன். இவனது புகழ் சொல்லப்பட்ட பிறகு அடுத்து வந்த அரசர்களான மாதவவர்மன், ஹரிவர்மன், விஷ்ணுகோபன், (மற்றொரு) மாதவவர்மன், கொங்கண்யாதி ராஜன் ஆகியோர் பற்றி சொல்லப்படுகிறது. கொங்கண்யாதி ராஜனின் காலத்தில்தான் இந்தச் செப்பேடு வழங்கப்பட்டிருக்கிறது. இவனைப் பற்றிக் கூறும்போது 'வயது குறைவு என்றாலும் முதிர்ந்த அறிவு பெற்றிருந்தான்' எனக் கூறுவதிலிருந்து செப்பேடு வழங்கும்போது கங்க அரசன் இளவயதுள்ளவனாக இருந்திருப்பான் எனத் தெரிகிறது.

பல்லவ அரசனாகிய சிம்மவிஷ்ணுவின் தாய் தன் கணவன் (சிம்மவர்மன்) குலத்தின் புகழ், தன்னுடைய புண்ணியம், தர்மத்தின் வளர்ச்சிக்காக தான் கட்டிய சமணக் கோயிலுக்கு, கோரிக்குந்தம் என்ற பகுதியில் புல்லியூர் என்ற ஊரில் சில நிலங்களும் ஒரு வீடும் கார்த்திகை மாதம் பௌர்ணமி நாளில் கங்க அரசனால் வழங்கப்பட்டுள்ளது.

எனின், களவரப் புல்லியினத்தரசர்களின் சமய நிலை என்ன ? என்ற வினா எழுகின்றது சங்க இலக்கியங்களைக் கொண்டு ஆராயுமிடத்து அன்றைய வாழ்வில் மக்களால் வணங்கப்பட்ட அல்லது போற்றப் பட்ட கடவுளர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமே அன்றிச் சமய நிலைகள்—சமய தத்துவங்கள்—கொள்கைகள் முதலானவற்றைத் தெளிவாக அறிந்து கொள்வது என்பது உண்மையில் இயலாத ஒன்று. அவ்வாறான ஒரு குறிப்பிட்ட தத்துவநிலை அன்று இல்லாததால்தான் பௌத்த—சமண சமயங்கள் எளிதின் நுழைந்து செல்வாக்குப் பெற முடிந்தது. அவ்வாறு செல்வாக்குப் பெற்ற நிலையில் அவை தத்தம் கோட்பாடுகளைப் பரப்ப அவர்கள் மொழியினையே பயன்படுத்தியிருத்தல் வேண்டும். எனவே, மொழி பெயர் தேயத்துக் களவர் தலைவன் புல்லியும் அவன் இனத்தாரும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தனர் என்பது ஒரு புறமிருக்க, தம் நாட்டு மொழியினையும், சமயத்தினையும், சமயச் செல்வாக்கினால் இடம் பெற்ற பாகதம், பாலி மொழிகளையும் போற்றியிருத்தல் வேண்டும் என்பதும் ஒருதலை.



இப்புல்லியின் பெயருடன் ஓரூர் கன்னட நாட்டில் இருந்ததையும், அங்கு அருகக் கடவுள் கோயில் இருந்ததையும் கன்னட நாட்டு ஹொஸக் கோட்டைச் செப்பேடுகள் (பல்லவர் செப்பேடுகள் முப்பது பக். 378) குறிப்பிடுகின்றன.

'கொங்கணியதிராசனது பன்னிரண்டாவது ஆட்சியாண்டில், பல்லவ சிம்ம விஷ்ணுவின் தாய் புல்லியூர்

பெங்களூர் பகுதியில் கிடைத்த மற்றொரு கல்வெட்டு, புல்லியூர் நாடு எனும் பகுதியை குறிப்பிடுகிறது.

## 20



### At the same place.

(Grantha and Tamil characters.)

svasti šrî šrîmat-pratâpa-chakravatti šrî-Hoyšaḷa-vîra-Vallâḷa-Dêvar Hesar-Kuṇḍâṇi-râjyam Virivi-nâḍu Murasa-nâḍu Mâšanti-nâḍu Veppûr Erumaṟai-nâḍu Ilaippâkka-nâḍu Kaḷavâra-nâḍu Ambaḍakki Noṇḍaṅguḷi Kaivâra-nâḍu Kuvaḷâlá-nâḍu Tekkal-nâḍu Aimbuḷuga-nâḍu Elavûr-nâḍu Eyil-nâḍu Tagaḍai-nâḍu Puṟamalai-nâḍu âna Adigai-mâ-nâḍu Paiyyûr-ppaṟṟu-pPeṇṇaiyâṇḍâr-maḍam Pulliyûr-nâḍu munnâna elâ nâḍugaḷil uḷḷa dêvastânaṅgaḷil uḷḷa maḍa-pati-gaḷukum sthânâpatigaḷukkum viṇṇappañ-jeyya-ppeṟa-kKaliyuga-varusham 4479 mêl šellâninṟa Šakâbdam 1224 âvadu Pla-varushattu Mârgaḻi..22 ti Tiṅgat-kiḻamai nâḷ inda râjyattu...dêvadânan-diruviḍaiyâṭṭam maḍa-ppuṟam paḷḷi-chchandam âna dâna-mânyaṅgaḷil siddhâyañ-gâṇikkai taṟiy-iṟai taṭṭâr-ppâṭṭam nall-erudu naṟ-pašu šârigaiy-uṭpaṭṭa pala varivugaḷum maṟṟum eppêrpaṭṭa iṟaigaḷum taviṟtu indanda vibhavaṅgaḷ indanda dêvargaḷukku-ppûšaikkum amudukkum bhôgaṁkkum tiruppaṇikkum dhârâ-pûṇṇam-âga udakam-paṇṇi-kkuḍuttôm ippaḍikku Dakshiṇa-Kayilâyam âna Tirunandîšvaram-uḍaiyâr kôyiliṟ maḍa-patigaḷum stânâpatigaḷum Tirunandîšvaram-uḍaiya-nâyanâr dêva-dâna nañjey punšey naṟ-pâl-ellaiyu mêl nôkkina maramuṅ-gîḻôkkina kiṇaṟum inda nâyanâr dêvadâna ûrgaḷum sarvamâniyam âgav-anubavittu inda nâya-nâṟku pûjaiyum amud-upabhôgamun-diru-ppaṇiyuṅ-guṟaiv-aṟa naḍatti namak-kum na-râjyattukkum aṟpudaiyam-âga vâḻtti sukhamêy-iruppadu ippaḍikku inda dhammam irâjar rakshai nâṭṭavar rakshai ippaḍikku šrî-Mâhêšvarar rakshai šivam astu inda dhammam vilakkinavan Geṅgai-karaiyil kurâl-pašu-kkonṟa papaṅ-goḷvân ippaḍikku idu Tirukkaṇ...... ..

*Epigraphic*

*பெங்களூர் பகுதியை கைப்பற்றி ஆட்சி செய்த புல்லி மன்னரின் பெயரில் புல்லியூர் எனும் ஊரும் ஏற்படுத்தப்பட்டுள்ளதை இச்செப்பேடு நமக்கு உணர்த்துகிறது.*

*வேங்கம் முதல் பெங்களூரு வரை அதிகாரம் செலுத்திய புல்லியின் வழியினர் பிற்காலத்தில் வடக்கில் பல்லவரின் முன்னேற்றத்தால் தெற்கு நோக்கி நகர்ந்து பெங்களூரு நந்திமலையை மையமாக கொண்டு ஆட்சி செய்து வந்தனர்.*

*கிபி 250 காலகட்டத்தில் களப்பிரர்கள், மூவேந்தர்களின் பலவீனத்தை பயன்படுத்தி சேர சோழ மற்றும் பாண்டிய மண்டலங்களை கைப்பற்றியுள்ளனர்.*

*பாண்டியரின் வேள்விக்குடி செப்பேட்டில் ” களப்ரன் எனும் கலியரன்” என களப்பிரரை குறித்துள்ளனர். களப்ரன் எனும் சொல் வடமொழியில் பொறிக்கப்பட்டுள்ளது.*

*களப்ரன் எனும் சொல்லின் நேர்மாறான தமிழ்ச்சொல் கள்வர் எனவாகும். கள்வர் கோமான் புல்லியின் வழியினர் என்பதால் இங்கு களப்ரன் என குறிப்பிடப்பட்டுள்ளனர்.* *(Journal of the asiatic society vol 1)*





of the Pallavas in Kānchī, the territorial distribution was something like this: the Chola country on either bank of the Kāvēri perhaps extending northwards to the Pennar right up, it may be, to somewhere south of the Pālār; the territory of Kānchī extending from here to perhaps as far as Tirupati. The region north of it almost up to the northern borders of the Pulicat Lake being under a people ruled over by a chieftain whose headquarters happened to be at Tirupati, and whose territory actually perhaps took in all that was under the Tiraiyans with their headquarters at Pavattiri (Reddipālem of the Gūḍūr Tālūka, Nellore District).[1] This chieftain at Tirupati is known from a certain number of poems in the Aha-Nānūṟu[2] collection. He is usually referred to as Kaḷvar-kōmān Pulli, that is Pulli, the king or chieftain of the Kaḷvar. I have it on the authority of the veteran Editor of these Śangam poems, Pandit Mahamahopadhyaya (Dr.) V. Swaminatha Ayyar, that the reading, on the authority of the manuscripts, is Kaḷavar and not Kaḷvar as he has edited them. He made this verification on my raising the point in regard to this very question of the Kaḷabhras and their identification. He assures me that wherever the term occurs as Kaḷvar, the reading Kaḷavar would suit equally, and, as far as his manuscript authority does go, Kaḷavar would certainly be more justifiable than Kaḷvar. I have pointed out elsewhere[3] that the Pallavas of the Prakrit and Sanskrit charters were, in all probability, generals and governors of the Āndhras in their south-eastern frontier, and gradually advanced to take possession of the territory of the Toṇḍamāns—the country of Toṇḍamaṇḍalam—taking the name Pallava, a Sanskrit translation of the Tamil Toṇḍaiyar. The people Kaḷavar who were occupying the territory above indicated formed the buffer between the southern viceroyalty of the Āndhras and the Chola viceroyalty of Kānchī, were dislodged from their position and a movement of people was set up. This probably was the Kaḷḷar emigration, as it is called popularly, a movement of this Kaḷavar into the territory of Kānchī, and then into that of the territory of the Malayamān and his neighbours in the middle, and then into the country of the Chola, extending into that of the Pāṇḍyas ultimately. The spread of the Kaḷḷar population to-day can be seen over all this locality right down to the district of Tinnevelly.[4] They

---

[1] See Nellore Inscriptions: Butterworth and Venugopal Chetty, Vol. I, Nos. 86–105, and the author's Maṇimēkhalai in its Historical Setting, pp. 48 and 49.

[2] Poems 61, 83, 209, 295, 311, 359, 393.

[3] Origin and Early History of the Pallavas, Journal of Indian History, Vol. II, pp. 20 ff.

[4] By Mr. H. A. Stuart the Kaḷḷans are said to be 'a middle-sized dark-skinned tribe found chiefly in the districts of Tanjore, Trichinopoly and Madura, and in the Pudukota territory'. The name Kaḷḷan is commonly derived from Tamil Kaḷḷavu which means theft. Mr. Nelson expresses

*Journal of raoyal asiatic society vol 1 ,1935*

*பெங்களூருக்கு அருகில் ஹோஸ்கடேட் பகுதியில் கிடைத்த பழைய கன்னட எழுத்தில் அமைந்த கல்வெட்டு அப்பகுதியை " ஸ்ரீ கள்வர் ராச்சியம்" என குறிப்பிடுகிறது. களப்பரராகிய கள்வர்களின் ராச்சியம் என எருமைநாடு குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் காலம் கிபி 4-5 ஆம் நூற்றாண்டு என கணிக்கப்பட்டுள்ளது. (Epi carnatic vol IX , pg 110)*

13

*At the same village, on a vîrakal in the Kenchamuniyappa's field.*

svasti śrimal-Urāḷa-Kkaḷavara tiru-rājyadal Maḷḷe-gāvuṇḍarum Châvâ-gâvuṇḍaru ......... Tuva-gâmuṇḍa satta Erreyaggar.. ... pûḷdegam

14



*பெங்களூரில் கிடைத்த " ஸ்ரீ களவர் ராஜ்ஜியம் " எனக்கூறும் கல்வெட்டு*

*பெங்களூருக்கு அருகில் உள்ள நந்தி மலையைத் தலைமையிடமாகக் கொண்டு களப்பிரர்கள் ஆட்சி புரிந்துவந்தனர்.*

**அச்சுத களப்பாளன்**



இவனைப் புகழ்வனவாகப் பல பாடல்கள் தமிழ் நூற்களில் காணக் கிடக்கின்றன. இவனது தாயகம் நந்திமாமலைப் பகுதியாகும். இவன் தன் ஆட்சியில் மக்களை ஆதரித்துச் சிறந்த புகழைப் பெற்றிருக்கின்றான். அதனால்தான்,

'பெரும்புகழ் அச்சுதக் கோவே
நந்திமா மலை சிலம்ப
நந்தி நிற்பரவுதல் நாவலர்க் கரிதே.'

என்று பாடியுள்ளனர் புலவர்கள். இவனைப் போற்றிப் புகழுதல் மிக அரிது. ஏனெனில், அவனது புகழை அளவிட முடியாது. அவ்வாறு புகழுடன் நந்தி மலைப் பகுதியினை ஆண்ட அவன் சிறிது சிறிதாகத் தொண்டை மண்டலப் பகுதியைக் கடந்து புகாரினைக் கைப்பற்றிப் பேரரசனாக வாழ்ந்திருக்கிறான். தமிழ் மூவேந்தரும் தம் சிறப்புக்களை இழந்து வாழ்கின்றனர். அச்சுதன் மூவேந்தரையும் வென்று ஒரு மொழி—ஓராணை செல்லும் ஆட்சியினை நிலை நாட்டுகின்றான். இக் கருத்தினை

***"அருளுடை பெரும்புகழ் அச்சுதர் கோவே
இணையை ஆதலின் பனிமதி தவழும்
நந்தி மாமலைச் சிலம்ப
நந்திநிற் பரவுதல் நாவலர் கரிதே' ( களப்பிரர் ஆட்சியில் தமிழகம், மயிலை சீனி வேங்கடசாமி)***

*என்கிறது அமிர்தசாகரனார் எழுதிய யாப்பெருங்கலம் என்னும் இலக்கண நூலின் விருத்தியுரை மேற்கோள் காட்டும் ஒரு செய்யுள் . களப்பிர மன்னரான அச்சுத களப்பாளனை நந்திமலையோடு தொடர்புபடுத்துகிறது இப்பாடல்.*

*நந்திமலை அருகிலுள்ள சிக்கபல்லபூரில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டு: **"நிகரில சோழ மண்டலத்துக் களவர நாட்டு நந்திமலை மேல்மஹா நந்தீஸ்வரம் உதயமகாதேவருக்கு"** என்று உறுதி செய்கிறது (Epigraphic Carnatica Vol 10 – Chikballpur Inscription no. 21)*

248 *Chik-Ballapur Taluq.*



**24**

**At the same place.**

**(Grantha and Tamil characters.)**

svasti šrî Pugaḻ-mâdu viḷaṅga Jaya-mâdu virumba Nila-magaḷ nilava Malar-magaḷ puṇara urimaiyiṟ-chiṟanta maṇi-muḍi-šûḍi Villavar kulaitara Mînavar nilai-keḍa Vikkala Šiṅgaṇan mêl-kaḍal-pâya-ttikk-anaittun-tan šakkara-naḍâtti vîra-siṁhâsanattu Puvani-muḻud-uḍaiyâḷôḍum vîṟṟ-irunt-aruḷiya Kôv-Irâja-kêšarivanmar âna šakkaravattigaḷ šrî-Kulôttuṅga-Šôḻa-Dêvarkku yâṇḍu 23 âvadu Nigarili-Šôḻa-maṇḍalattu-kKaḷavâra-nâṭṭu Tirunantîšvaram-uḍaiya Ma-hâdêvarkku Jayaṅgoṇḍa-Šôḻa-maṇḍalattu....kkâṭṭu-kkoṭṭattu Tamadûr-nâṭṭu Šembiyau Tiṅgâḍupâkkattu Tiṅgâḍu...kkiḻân Tirumâri-Madurântakan âna sênâpati Gâṅgêyarâjan šâttiy-aruḷa iṭṭa paṭṭam onṟinâl Madurântakan mâḍai-kku a....mâṟṟu nalladu kuḍiñai-kkal niṟai ..eṇ-kaḻañje-kunṟi idu šrî-Mahêš-vara-rakshai

*நிகரிலி சோழ மண்டலத்து களவர் நாட்டு திரு நந்த*
*இருளறு திகிரியோடு வலம்புரித் தடக்கை ஒருவனை வேண்ட இருநிலம் கொடுத்த நந்திமால்வரை சிலம்பு நந்தி' எனும் யாப்பெருங்கலத்தின் பாடல் வரிகள் திருமாலை வழிபட்டு பெருநிலத்தைக் களப்பிரர் பெற்றதாகக் கூறுகிறது. களப்பிரர்கள் திருமாலின் பால் பேரன்பு கொண்டிருந்ததை இச்செய்யுள்கள் உணர்த்துகின்றன.*

*களப்பிரர் தமிழரே*

*களப்பிரர் காலத்தில் தமிழ் மொழியின் பால் இவர்களுக்கு இருந்த பற்றும் புலமையும் இவர்களின் தாய்மொழி என்னவென்று நமக்கு உணர்த்தும்.*

களப்பிரர் தமிழரே என்பதனை உறுதிசெய்ய பின்வரும் பட்டியல் துணை புரியுமெனலாம்.



| களப்பிர அரசன் | ஆண்ட இடம் | எல்லை | காலம் | பகைவன் |
|---|---|---|---|---|
| 1. புல்லி | வேங்கடம் | தமிழ்நாடு | கி.பி. 1 | - |
| 2. அச்சுதன் | சோழநாடு | " | கி.பி. 4 | - |
| 3. களப்பிரன் | பாண்டியநாடு | " | கி.பி. 6 | கடுங்கோன் |
| 4. களப்பிரன் | தொண்டைநாடு | " | கி.பி. 4 | பப்பதேவன் |
| 5. களப்பிரன் | " | " | கி.பி.4 | சிவஸ்காந்தவர்மன் |
| 6. களப்பிரன் | " | " | கி.பி. 5 | புத்தவர்மன் |
| 7. களப்பிரன் | " | " | கி.பி.575-615 | சிம்மவிஷ்ணு |
| 8. களப்பிரன் | " | " | கி.பி.630-660 | முதலாம் நரசிம்மன் |
| 9. களப்பிரன் | ஆந்திரா | ஆந்திரா | கி.பி. 7 | சாளுக்கியன் |
| 10. களப்பிரன் | " | ஆந்திரா | கி.பி. 8 | சாளுக்கியன் |
| 11. களபோரர் | கன்னடநாடு | கன்னடம் | கி.பி. 3 | காகுஸ்தன் |
| 12. திண்டீகன் | " | " | கி.பி. 3-4 | - |
| 13. களவர் | பாண்டியநாடு | தமிழ்நாடு | கி.பி. | பாண்டியன் |
| 14. எருமையூரன் | " | " | " | பாண்டியன் நெடுஞ்செழியன் |

நன்றி: க.ப.அறவாணனின் 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை'

